21st August 1961]

*Illicit felling of trees (Madurai district)*

* 1305 *Q.*—Sri N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, உத்தமபாளையம், தாமரைக் குளம், தேவாரம் கண்மாய் போன்ற குளங்களில் உள்ள மரங்களை திருடர்கள் வெட்டிச் செல்வது சர்க்காருக்குத் தெரியுமா ?

(இ) இதைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

The Hon. Sri P. KAKKAN : (*a*) & (*b*) No intimation has been received about the illicit cutting of trees. The babul trees at the tank bed of Tamaraikulam belonging to Public Works Department were sold in public auction and removed. Presumably, this might have been taken as illicit cutting.

Sri N. R. THIAGARAJAN : சென்ற ஐந்தாண்டுகளாக "குளங்களில் உள்ள மரங்களை ஏலத்திற்கு விட்டு விடுங்கள்வ" என்று அங்குள்ளவர்கள் சொல்லியும், ரெவினியூ டிபார்ட்மென்டாரும் பொது மராமத்து டிபார்ட் மென்டாரும் ஒத்துக்கொள்ளாததால், மரங்கள் ஏலத்திற்கு விடப்படாமல் இருக்கின்றன. அதனால் யார் யாரோ மரங்களை வெட்டிக்கொண்டு போய்கொண்டிருக்கிறார்கள். உத்தமபாளையம், தாமரைக்குளம் கண்மாய் களிலுள்ள மரங்களை உடனடியாக ஏலம் விடவேண்டும் என்று சர்க்கார் உத்தரவிடுவார்களா ?

The Hon. Sri P. KAKKAN : தாமரைக் குள மரங்களை ஏலத்திற்கு விட் டிருக்கிறார்கள். ஏலம் விட்ட மரங்களை வெட்டிக்கொண்டு போகவில்லை. அதனால், அவைகளில் சிலவற்றையாவது வெட்டிக்கொண்டு போயிருக்க லாம். ஏலம் விட்ட பிறகு, வெட்டிக் கொண்டு போவதைப் பார்த்து, திருட்டுத்தனமாக வெட்டிக்கொண்டு போவதாகச் சொல்லப்படுகிறதோ என்னவோ என்று கலெக்டர் தகவல் தந்திருக்கிறார். தேவாரத்திலிருப் பது பொது மராமத்து இலாகாக் குளம் அல்ல. அது ரெவின்யூ இலாகா வின் கீழுள்ள மைனர் இர்ரிகேஷனைச் சேர்ந்தது என்று நினைக்கிறேன். அதிலுள்ள மரங்கள் ஏலம் விடப்பட்டு இருந்தாலும்; வெட்டிக் கொண்டு போகப்படாமலிருந்திருக்கலாம். அவைகளில் சிலவற்றை யாராவது வெட் டிப் போவதைப் பார்த்து, திருட்டுத்தனமாக வெட்டுவதாக கனம் அங்கத் தினர் நினைக்கிறார் போலும். சில ஏரிகளில் மரங்கள் அதிகமாக இருக் கின்றன. அதிகமாக வளர்ந்து முற்றின மரங்களை ஏலம் விடுவதற்குத் தக்க ஏற்பாடு செய்யும்படி உத்தரவிட்டிருக்கிறோம்.

*Institute of Handloom Technology*

* 1306 *Q.*—Sri T. S. RAMASWAMI (on behalf of Sri M. P. SARATHI) : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் கைத்தறித் தொழில் கல்வி நிலையங்கள் (**Institute of Handloom Technology**) எத்தனை, எங்கு உள்ளன ?

(இ) 1959-ல், 1960-ல் எவ்வளவு பேர் பயிற்சி அளிக்கப்பட்டனர் ?

The Hon. Sri R. VENKATARAMAN : There are no institutes of handloom technology in this State. During 1959–60, there were, however, 17 institutions in this State in which handloom weaving courses were taught as shown below :—

| | |
|---|---|
| Madras ... ... ... ... ... | 4 |
| Thanjavur district ... ... ... ... | 3 |
| Tiruchirappalli district ... ... ... | 2 |
| Tirunelveli district ... ... ... ... | 2 |
| Salem district ... ... ... ... | 1 |
| Kanyakumari district ... ... ... | 5 |

[21st August 1961

(இ) The total number of candidates on rolls during 1959-60 in these institutions was 477.

*Welfare of Backward Classes*

***1307*Q*.—Sri A. VEDARATHNAM**: கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் ஷெட்யூல்டு வகுப்பினரின் நலனுக்காக நம் மாநிலத்திற்கு ஒதுக்கிய 16 கோடி ரூபாயை குறைக்கும் உத்தேசம் மத்திய அரசாங்கத்திற்கு உண்டா ?

(இ) அப்படியானுல், அந்தத் தொகை குறைக்காது வழங்கத் தக்க நடவடிக்கை நம் அரசாங்கத்தாரால் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதா ? அதன் விவரமென்ன ?

**The Hon. Sri P. KAKKAN** : (அ) & (இ) A statement[a] is placed on the table of the House.

**Sri A. VEDARATHNAM** : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற ஏட்டில் இரண்டாவது பாராவில், "The All-India outlay for third plan for backward classes has been drastically cut down to Rs. 100 crores" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த முறையிலே நம்முடைய மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகையைக் குறைக்க ஏற்பாடு உண்டா ? ஒதுக்கப்பட்ட தொகை முழுதும் கிடைக்குமா ? குறைக்கும் உத்தேசம் இருந்தால், அப்படிக் குறைக்காமலிருக்க நம்முடைய அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா ?

**The Hon. Sri P. KAKKAN** : மொத்தமாக, இந்தியா தேசத்திலுள்ள ஆதிவாசிகள், ஹரிஜனங்கள், பின் தங்கிய மக்கள் இவர்கள் எல்லோருக்குமாகச் சேர்த்து 100 கோடி ரூபாய்தான் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கியிருக்கிறுர்கள். அப்படி ஒதுக்கும்போது, நம்முடைய மாநில ஜனத்தொகை அடிப்படையில் நமக்கு எவ்வளவு ஈவு கிடைக்குமோ அதைவிடக் கூடுதலாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. கூடுதலாக வந்திருந்தாலும் மேலும் அதிகமாகச் செலவழிக்க வேண்டிய தொகையை இந்த மாநிலமே ஏற்றுக் கொள்வதற்கு முன் வந்திருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூபாய் 12 கோடி செலவு செய்திருக்கிறேம், மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூபாய் 20 கோடி செலவு செய்ய இருக்கிறேம் என்பதைக் கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**Sri P. G. MANICKAM** : சென்னை ராஜ்யத்தில் தீண்டாமையினுல் ஏற்படும் கொடுமைகள் அதிகமாக இருக்கின்றன என்றும், இவைகளினுல் பாதிக்கப்பட்டவர்களுடைய புனர்வாழ்வுக்குத் தக்க நடவடிக்கை எடுக்கப்படவேண்டுமென்றும் மத்திய சர்க்காரினுல் நியமிக்கப்பட்ட ஷெட்யூல்டு வகுப்பார், ஷெட்யூல் ட்ரைபினர்களுக்கான கமிஷனர் தம்முடைய அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறுர். நமது சென்னை ராஜ்யத்திலுள்ள ஷெட்யூல் வகுப்பினரின் புனர்வாழ்வுக்கான காரியங்களை அதிகமாகச் செய்ய வேண்டுமென்று கமிஷனர் அவர்களே தெரிவித்திருக்கும் காரணத்தைக் காட்டியாவது இன்னும் அதிகத் தொகை பெறுவதற்கு நம்முடைய சென்னை சர்க்கார் முயற்சி செய்யுமா ? இதுபற்றி மத்திய சர்க்காருக்கும் தெரிவிக்குமா ?

**The Hon. Sri P. KAKKAN** : அதெல்லாம் திட்டம் போடும்போது நன்கு பரிசீலனை செய்து, இந்த மாநிலத்திற்கு எவ்வளவு ஒதுக்க வேண்டுமென்று முடிவு செய்து இருக்கிறுர்கள். மேற்கொண்டும் அதிகமாகத் தேவைப்படுமானுல், அதை இந்த மாநில சர்க்காரே ஏற்றுக்கொள்ளும் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்குத்

---

[a]Printed as Appendix I on page 532 infra.